# கரந்தைத் தமிழ்ச் சங்கம்

( காப்பிடப்பெற்றது. )

தஞ்சை

ஒன்பதாம் ஆண்டின் அறிக்கை,

சித்தார்த்தி (தை)—காலயுத்தி (மார்கழி)



திரு. வே. இராதாகிருட்டின பிள்ளை, பீ. ஏ.

சங்கம் நிறுவிய துங்கன்.

லாலி எலெக்டிரிக் அச்சுக்கூடம், தஞ்சாவூர்.

1920.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்

பெரியாரைத் துணைக் கோள்ளும்

---

விரோதிகிருது௵ வைகாசிமீ கஉ நிறுவப்பெற்றது. (14—5—1911)

## ஆண்டுத் திருவிழாக்களில்

## தலைமை தாங்கியவர்கள்.

க. திரு. கா. நமச்சிவாய முதலியார் அவர்கள், சென்னை.

உ. திரு. டீ. ஏ. இராமலிங்கம் செட்டியார் அவர்கள், பீ. ஏ., பீ. எல்., கோயமுத்தூர்.

ஙா. திரு. இராவ் சாஹிப் தோ. இராமகிருட்டின பிள்ளை அவர்கள், பீ. ஏ., எவ். ஆர். எச். எஸ்., சென்னை.

ச. திரு. திவான் பகதூர் சா. ராம. மு. இராமசாமிச் செட்டியார் அவர்கள், சிதம்பரம்.

ரு. திரு. மாட்சிமிக்க பா. இராசராசேசுவர சேதுபதி அவர்கள், இராமநாதபுரம்.

சூ. திரு. தி. செல்வக்கேசவராய முதலியார் அவர்கள், எம். ஏ., சென்னை.

எ. உயர் திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள், திருப்பாதிரிப்புலியூர்.

---

பெரியாரைத் துணைக் கோள்ளும்

கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

(பதிவுசெய்யப்பெற்றது)

தஞ்சை

---

## ஒன்பதாம் ஆண்டின் அறிக்கை.

காலயுக்தி, சித்தார்த்தி ஆண்டு.

---

தண்டமிழ்த்தொண்டில் தலைசிறந்து விளங்கும் ஐயன்மீர்!

எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் நம் சங்கத்தின் ஒன்பதாம் ஆண்டு இனிது நிறைவேறியது. இவ்வாண்டின் நிகழ்ச்சிகள் பின் வருமாறு :—

### ஏழு, எட்டாம் ஆண்டுகளின் திருவிழா.

இத்திருவிழா சித்தார்த்தி ஆண்டு வைகாசித்திங்கள் கக, கஉ (24, 25—5—1919), ஆம் நாட்களில் திருக்கோவலூர் ஆதீனம், திருப்பாதிரிப்புலியூர், திரு. ஞானியார் மடத்தின் தலைவர் உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தலைவரவர்கள் பல்லிய முழங்கத்தொண்டர் குழாம் புடைசூழத் திருவுலாப்போந்து திருவிழாவிற்கெனச்சிறப்பாக அமைந்துள்ள பெரும் பந்தலுக் கெழுந்தருளித் தமிழன்பர்போற்றிசைப்பப் பண்மீனாப்பண் தண்மதியொப்ப முதலிடத்தமர்ந்து யாவருளமுங்கனிந்துருகும் வண்ணம் தமிழின் அருமை பெருமைகளை நன்குவிளக்கி முன்னுரை கூறியருளினார்கள்.

பின்னர், சுவாமிகள் பணிப்பச் சங்க அமைச்சர்அவர்கள் ஏழு எட்டாம் ஆண்டுகளின் அறிக்கை படித்தனர். அதன்பின் ஆண்டுக்குழுமியிருந்த பெரியோர்களாற் கீழ்க்கண்ட முடிவுகளும், சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன.

### முடிவுகள்.

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் ஏழு, எட்டாம் ஆண்டுகளின் திருவிழாத் திருநாளில் கூடிய தமிழ்மக்களெல்லாம் :—

1. இதுகாறும் நடந்த கொடும் போரை ஒழித்துத் தம்வேந்தர் பெருமானாகிய மிகு மாட்சிமிக்க ஜார்ஜ் மன்னர் மன்னருக்கு ஒப்பில்லா

முழு வெற்றியருளிய பேரருளாளனுகிய எல்லாம் வல்ல இறைவனைப் பேரன்பொடிறைஞ்சித், தம் மன்னர் பெருமானுக்குத் தமது என்றும் நிறைந்த உரிமையன்பினை வெளியிட்டுத் தெரிவித்துக் கொள்ளுகிருர்கள்.

இது, தலைவராகிய சுவாமிகளால் முன்மொழியப்பட்டு, மாட்சிமிக்க சென்னை ஆட்சிக்கிழவர் அவர்களுக்கு அனுப்பப்பட்டது.

2. இச்சங்கத்தின் ஆரும் ஆண்டின் திருவிழாக்காலத்தில் செய்த, திருவையாறு வடமொழிக்கலலூரியின் சார்பான முடிவைத் தஞ்சை நாட்டாண்மைக் கழகத்தார் ஆய்ந்து முறைசெய்யாமை குறித்துத் தம் வருத்தத்தை வெளியிட்டுத்தெரிவித்துக் கொள்வதுடன், இனியாவது காலந்தாழ்க்காது மேற்கண்டகல்லூரியின் இருப்பிடத்தைத்திருவையாற்றி லிருந்து தஞ்சைக்கு மாற்றவேண்டுமென்றும், அதில் தமிழைத் தலை மொழியாகக் கொண்டு பயிற்றுவிக்க வேண்டுமென்றும் வற்புறுத்துகி ருர்கள்.

இது, திரு. ந. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பி. ஏ பி. எல்., அவர்களால் முன்மொழியப்பட்டு, திரு க. சண்முகம் பிள்ளை பி. ஏ., அவர்களால் வழிமொழியப்பட்டு, தஞ்சை நாட்டாண்மைக் கழகத்தாருக்கு அனுப்பப்பட்டது. [இதன்மேல், சென்னைப் பல்கலைக்கழகத்து வித்து வான்பட்டப் பரீக்ஷைச் சட்டத்தில் இப்பொழுது தலைமொழி, துணை மொழிமுறையில் தமிழ்ப் பாடத்தில் வேற்றுமையின்மையின் மேற்கூறிய முடிவின் பிற்பகுதியைக் குறித்து ஒன்றுஞ் செய்வதற்கில்லை யென மறுமொழி கிடைத்தது, கல்லூரியைத் திருவையாற்றிலிருந்து தஞ்சைக்கு மாற்றுவதைப் பற்றி ஒன்றும் சொல்லவும் செய்யவும் படவில்லை.]

3. தமிழ்மொழி தன்பண்டைச்சிறப்பும், உயர்நிலையும் அடைதற்கு வழியாகப் பல்வேறு இடங்களிலும் உள்ள தமிழ்ச்சங்கங்களும், தமிழ்ப் புலவர்களும் ஒத்துழைத்துத் தமிழ்த் தொண்டாற்றல் இன்றியமையாமை யாகலான், தமிழ் மேம்பாட்டில் குறிக்கொண்ட சங்கங்கள், புலவர்களின் பொதுப் பெருங்கழகம் (Tamil Sangam's Conference Association and Tamil Pandits Conference Association) ஏற்பட்டுத் தமிழ் வளர்ச்சிக்கான வழிகளை ஆராய்ந்து ஆண்டுதோறும் குறித்த நாட் களில் ஒன்றுகூடி, அவ்வாராய்ச்சிகளைக் கருதி முடிவுசெய்ய வேண்டு மென்று விரும்புகிருர்கள். இவ்விருப்பத்தை நிறைவேற்றற்கான வழிகளை ஆய்ந்து முடிக்கும்படி கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரைக் கேட்டுக்கொள்வ துடன், இதில் இவர்க்குத்துணையாமாறு மற்றைச் சங்கங்களையும், புலவர் களையும் வேண்டுகிருர்கள்.

இது திரு. பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களால் முன் மொழியப்பட்டு, திரு. அ. கணபதிபிள்ளை யவர்களால் வழி

மொழியப்பட்டது. [இம் முடிவின் கருத்தை நிறைவேற்றற்கான ஏற்பாடுகள் நடந்துவருகின்றன.]

4. சென்ற ஆண்டில் திருச்சிராப்பள்ளியில் கல்விக்கழகத் தமிழ்ப் பண்டிதர் பெருங் கூட்டம் கூடித் தம்மையும், தமிழையும் குறித்து ஆய்ந்தமைக்குப் பெருமகிழ்வடைவதுடன், அங்ஙனமே ஆண்டு தொறும் பலவிடங்களிலும் அத்தகைய கூட்டம் நடைபெறவேண்டியது இன்றியமையாததென்று எண்ணித்தெரிவித்துக் கொள்ளுகிறார்கள்.

இது திரு. T. N. குருமூர்த்திப் பிள்ளை யவர்களால் முன் மொழியப்பட்டு, திரு. T. கூரத்தாழ்வார் முதலியார் அவர்களால் வழிமொழியப்பட்டு, கல்விக்கழகத் தமிழ்ப்பண்டிதர் பெருங் கூட்டத்தின் அமைச்சர் அவர்களுக்கு அனுப்பப்பட்டது.)

5. தமிழ்மொழியானது தொன்மையும், சீர்மையும், செம்மையும் வாய்ந்து விளங்குகின்ற ஓர் உயர்தனிச் செம்மொழி யென உறுதிப்பட்டுப் பலதிறத்தாராலும் ஏற்றுக் கொள்ளப்படுவதால், சென்னைப் பல்கலைக் கழகத்தார் தாம் இது காறும் கொண்டிருந்த கொள்கையை மாற்றித் தமிழ் மொழி ஓர் உயர் தனிச் செம்மொழியே யென்பதை ஒப்புக்கொண்டு இத் தென்றமிழ்நாட்டுப் பல்கலைக் கழகத்தில் அதற்கு முறைப்படி முதலிடமும் (first place) உரிமைகளும் (recognition) கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள்.

(இது திரு. T. S. சபாபதி பிள்ளை, பி. ஏ., அவர்களால் முன் மொழியப்பட்டு, திரு. M. அப்பாவு முதலியார், பி. ஏ. பி. எல், அவர்களால் வழிமொழியப்பட்டது.)

6. தமிழ்மொழியின் நலத்தைப் பேணுவதற்கும், அதற்குரிய பதவியையும், உரிமைகளையும் தேடிக்கொடுத்தற்கும், தமிழ்மொழிக் கென உண்மைத்தொண்டாற்றிவரும் திரு. பா. வே. மாணிக்கநாயக்கர், பி. இ., எம். சி. ஐ., அவர்களைச் சென்னைப் பல்கலைக் கழகத்துணைவருள் ஒருவராக்கவேண்டுமென்று அக்கழகத் தலைவர் அவர்களையும், சென்னை ஆட்சியாளரையும் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

(இது திரு. சாமிநாத பிள்ளை, M. A., B. L., அவர்களால் முன் மொழியப்பட்டு திரு. V. A. சகராயப்பிள்ளை B. A., B. L., அவர்களால் வழிமொழியப்பட்டது.)

மேற்படி இரண்டு முடிவுகளும், சென்னைப் பல்கலைக் கழகத் தலைவர் அவர்களுக்கும், துணைத்தலைவர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும் சென்னை யாட்சி அமைச்சர் அவர்களுக்கும் அனுப்பப்பட்டன.

## சொற்பொழிவுகள்.

க. குகன்—திரு. அ. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள், திருவரங்கம்.

உ. அதியமானெடுமானஞ்சி—இலக்கணவிளக்கபரம்பரைத் திரு. எஸ் சோமசுந்தர தேசிகர் அவர்கள், திருவாரூர்.

ரு. அன்பு—திரு. எஸ். சோமாஸ்கந்தபட்டர்கார் அவர்கள், திருமறைக்காடு.

ச. அக்ஞானம்—திரு. பா. வே. மாணிக்கநாயக்கரவர்கள், பீ. இ., எம். சி. ஐ., வேலூர்.

ரு. தமிழ்மொழிபேணல்—திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை அவர்கள் பி. ஏ., பி. எல்., திருநெல்வேலி.

சு. தமிழ் முதனூல்கள்—திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், எம். ஏ., எம். எல்., திருமயிலை.

எ. தமிழ் ஓர் உயிர்தனிச் செம்மொழியன்றோ? — திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் சென்னை.

### திரு. வே. இராதா கிருட்டினபிள்ளை அவர்கள், பி. ஏ.

நம் சங்கங்கண்டு, நமக்கெல்லாம் தண்டமிழ்த் தொண்டின் வழி துறை காட்டிய பெருந்திருவாளர் வே. இராதாகிருட்டின பிள்ளையின் நண்பர்களால் சங்கத்துக்குதவப்பெற்ற அவர்களது திருவுருவப்படம் ஆண்டுத் திருவிழாக்காலத்து உயர்திரு ஞானியார் சுவாமிகள் அவர்களால் காணப்பெற்றுப் பிள்ளையவர்களது உருவும் ஊக்கமும் எம்முளத்தெலாம் ஒளிரச் சங்கக் கட்டிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது.

### உறுப்பினர்

ஒன்பதாம் ஆண்டின் தொடக்கத்தில் நம் சங்கத்தில் இருநூற்றுப் பத்து உறுப்பினர் இருந்தார்கள். இவ்வாண்டிற் சேர்ந்தவர்கள் பதினெழுவர். சங்கத்தினின்றும் விலகிக் கொண்டவர் ஒன்பதின்மர். உலக வாழ்க்கையை நீத்தார் இருவர். எனவே இப்பொழுது உறுப்பினராக வுள்ளார் இருநூற்றுப்பதினறுவர். (சேர்க்கை-க.) இவ்வாண்டில் திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் நம் சங்கத்தின் ஆயுட்கால உறுப்பினராகச் சேர்ந்தார்கள்.

### கூட்டங்கள்

இவ்வாண்டில் உறுப்பினர் தொழிற் சூழ்ச்சிக் கூட்டம் இரண்டும், தொழிற்கழகத்தார் கூட்டம் பதின்மூன்றும், கீழ்க்காணும் விரிவின்படி பொதுக்கூட்டங்களும் நிகழ்ந்தன.

௧. நம் சங்கத்தைச் சார்ந்து இத்தஞ்சையிற் பற்பல கழகத்தாரும் திருவாளரும் உயர்திரு ஞானியார் சுவாமிகளைக் கொண்டு பல்திறத்த பொருள்களைப்பற்றிச் சிறந்த சொற்பொழிவுகள் செய்வித்தார்கள்.

௨. இவையன்றி நடைபெற்றபிற பொதுக்கூட்டங்களாவன :—

தஞ்சை.

சித்தார்த்தி சித்திரை, ௧ நாள்.

(14—4—19)

௧. திரு. சிங்காரவேலு முதலியார் அவர்கள் தலைமையில் புத்தாண்டு விழா நடைபெற்றது. அப்பொழுது நம் சங்கத்தலைவர் அவர்கள் நமது கடமை என்பது பொருளாகச் சிறந்ததோர் சொற்பொழிவு செய்தார்கள்.

திருச்சி.

௨. சித்தார்த்தி ஆடி, ௬ (21—7—17) திருஞானியார் சுவாமிகள் செந்தமிழ்ச் சிறப்பை விளக்கினார்கள்.

௩. சித்தார்த்தி, கார்த்திகை ௧௦ (25—11—19) Rev Father Quinn அவர்கள் தலைமையில் திரு. பா. வே. மாணிக்கநாயக்கர் அவர்கள், Phonetics for Students & Teachers Ancient Tholkappier *Vs.* Modern Jones என்பதைப் பற்றிச் சொற்பொழிவு செய்தார்கள்.

நூல்நிலையம் (Library)

இவ்வாண்டின் தொடக்கத்தில் இந்நிலையத்தில் ௧௨௧ சுவடிகள் இருந்தன. இவ்வாண்டில் விலைக்கு வாங்கியனவும், நன்கொடைவந்தனவுமாக ௧௦௭ சுவடிகள் சேர்ந்தன (சேர்க்கை 2) ஆக இப்போது நிலையத்திலிருப்பன ௨௫௯ சுவடிகள்.

செந்தமிழ்க் கைத்தொழிற் கல்லூரி.

நம் தாய்மொழியாம் தமிழ்மொழி வழியாகப் பல்கலைகளையும் பயிற்றுவித்துக் கைத்தொழிலையும் மேம்படச் செய்வதற்கு அடிப்படையாகத் தொடங்கிய நம் சங்கத்தைச் சார்ந்த தொடக்கப்பள்ளியில் (Elementary School) இவ்வாண்டின் தொடக்கத்தில் ௬௧ பிள்ளைகள் இருந்தார்கள். பிறகு இவ்வாண்டில் ௭௮ பிள்ளைகள் சேர்ந்தார்கள் ௬௫ பிள்ளைகள் நீங்கினார்கள். எனவே இப்போழுது ௭௬ பிள்ளைகள் படித்து வருகிறார்கள்.

பொதுவாக உயர்தரக்கல்வியையும், சிறப்பாகத் தமிழ்க் கல்வியையும் நாட்டிற்குப் பயன் தரத்தக்க கைத்தொழில்களையும் வளரச்செய்யவேண்டுமென்ற நம் நோக்கம், போதிய பொருளின்மையால் இப்பொழுது இந்நிலையிலிருக்கிறதென்றாலும், இறைவன் திருவருளால் விரைவில்

நன்னிலையடையுமென நம்புகின்றோம். நமது சங்கத்தலைவர் அவர்கள் உதவிவரும் திங்களிருபத்தைந்து ரூபாவும், அரசாட்சியினர் உதவும் பொருளும், கரந்தை ஒணிகரது உண்டிகை யுதவியுமன்றி வேறொரு வருவாயு மின்மையால் இப்பொழுது நாம் நம் வேலையில் மிகுதியாக எட்டமுடியவில்லை, நம் தலைவர் அவர்களைப் போலப் பிறபெரியோர் களும் இயன்றவரை அருளுவார்களாயின் நம் நோக்கம் முற்றி, நாடு நலம் பெறுவதாகும். அனைவரும் தாம் செய்யும் உதவி சிறிதென்றெண்ணாது 'உதவி வரைத்தன் றுதவி உதவி செயப்பட்டார் சால்பின்வரைத்து' எனும் திருமறையை யுன்னித் தம்மால் இயன்றவரை உதவுவார்களாக.

## இலவசப்படிப்பகம்

நம் சங்கத்தைச்சார்ந்து யாவர்க்கும் பயன்பட்டுவரும் படிப்பிடத் திற்கு, ௧. சுதேச மித்திரன், ௨. திராவிடன், ௩. ஞானசாகரம், ௪. நல் லாசிரியன், ௫. விவேகசிந்தாமணி, ௬. Madras Times ௭. South Indian Research, ௮. Fergusan Gollege Magazine, என்ற தாள்கள் வரவழைக்கப்படுகின்றன. இவையன்றி நம் தலைவர் அவர்களால் ௯. Justice, ௧௦. சித்தாந்தம், ௧௧. கிருஷிகன், ௧௨. செந்தமிழ், ௧௩. Mysore University Magazine ௧௪. தமிழர் நேசன் என்னும் தாள்களும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் கடு செந்தமிழும் உதவப்பெற்று வருகின்றன.

தஞ்சை நகராண்மைக் கழகத்தார் ஆண்டுதொறும் நூறு ரூபா அன்பொடு உதவி நம்படிப்பகத்தை விரும்பிப் போற்றி வருகின்றனர்.

## வெளியீடு.

இவ்வாண்டில் நமது சங்கத்திலிருந்து திரு. பண்டிதர் மு வேங்கட சாமி நாட்டார் அவர்களால் புலவர் வரலாற்று வரிசையில் 'நக்கீரர்' என்னும் நூல் எழுதப்பட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. சென்னைப் பல்கலைக்கழகத்தார் இந்நூலின் அருமையினையுணர்ந்து இதனைப் பி. ஏ. பட்டம் பெறுவார்க்குப் பாடமாக வைத்திருக்கின்றனர். இதற்காக யாம் அவர்கள் பால் மிகுதியும் நன்றி பாராட்டுகிறோம். மற்றைய புலவர் வரலாறுகளையும், கலைகளையும் பல புலவர் ஆராய்ந்து வருகின்றனர். விரைவில் பல நூல்கள் வெளிவரும்.

## திங்கட்டாள் வெளியீடு.

நமது நோக்கங்களைத் தமிழுலகத்திற்கறிவித்தற்கும், தமிழ்ப்புலவர் கள் அவ்வப்போது காணும் உண்மைகள், நூலாராய்ச்சிகள் முதலியவற்றை யாவருமுணரவெளியிடற்கும், நம்தாய்த்தமிழின் உண்மையுரிமைகளை நிலை நாட்டுதற்கும், இன்னும் பல இன்றியமையாத தொண்டுகளைச் செய்தற் கும் கருவியாக ஒரு திங்கட்டாள் (Monthly Journal) நமது சங்க மூல

மாகத் தொடங்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அது விரைவில் வெளி வரவும், என்றும் நின்று நிலவி விளங்கவும் அன்பர்கள் யாவரும் அதனைப் போற்றிப் புரக்க வேண்டுகின்றோம். இதன் முழுவிவரமும் 'தமிழ்ப் பொழில்' என்னும் தலைப்புடைய விளம்பரத்தாளில் காண்க.

கிளைச்சங்கம்.

நமது திரிசிரபுரம் கிளைச் சங்கத்தின் முயற்சி நலங்களை யெல்லாம் மூன்றாவது சேர்க்கையிற் காண்க. இக்கிளையுறுப்பினர் தமிழ்க்கல்வியை மேம்படச் செய்து வருதல் பெருமகிழ்வைத் தருகின்றது. உறுப்பினர்களை ஊக்கப்படுத்திப்பயிற்றிவரும் திரு. பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களுக்கு யாம் பெரிதும் நன்றிபாராட்டுகின்றோம்.

வருவாய்.

உளத்தில் பெருக்கம் வாய்ந்த நம் உறுப்பினர் யாவரும் செயலாலும் அதனை உணர்த்த வேண்டித் தத்தம்மாலியன்ற பொருளுதவிசெய்து வருகின்றனர். இவ்வாண்டின் வரவு செலவுகள் பின்னர்க்காட்டப்பட்டிருக்கின்றன, (சேர்க்கை ச) நம் சங்கநோக்கங்களையும், அதன் வருவாயையும் நோக்குழி அவை ஒன்றற்கொன்று பற்றாவாய்க்காணலாம். நம் அரியபெரிய நோக்கங்கள் விரைவில் இனிது நிறைவேறித், தமிழும் தமிழரும் மேம்பட வேண்டுமாயின், பெருஞ்செல்வம் வாய்ந்த பெருமக்கள் இந் நொடிமுதலேனும் உண்மை உணர்ச்சி பெற்றுத் தம் மறைவிடம் விட்டு வெளிப் போந்து தாம் பொருள் பெற்ற பயனையடையவேண்டும்.

இவ்வாண்டில் தம்மில்லங்களில் உண்டாய வாழ்க்கை நலநேர்ச்சிகளில் தமிழிறைவை இறைஞ்சிக் காணிக்கை செலுத்தியார் நிரல்வருமாறு.

க. திரு. M. நடராசபிள்ளை அவர்கள் B. A., B. L. தஞ்சை திருமணம்—ரூ. 18 பெறுமான புத்தகம்.

உ. திரு. P. கோவிந்தராசர் அவர்கள் திரிசிரபுரம் தொழிற்பேறு ரூ. 32 பெறுமான புத்தகங்கள்.

ந. திரு. க. அண்ணாமலைப்பிள்ளை அவர்கள் ஆலங்குடி மகப்பேறு ரூ. 2.

ச. திரு. R. சிவகடாக்ஷம் பிள்ளை அவர்கள் இடைக்கியம் மக்கள் காதணிமங்கலம் ரூ. 20.

ரு. திரு. ஆ. ச. ஆறுமுகம்பிள்ளை அவர்கள், கரந்தை பேரன்னை நிதி ரூ. 1.

சா. ,, ,, அன்னை நிதி ரூ. 0—4—0

எ. திரு. இ. சண்பகவல்லியம்மாள் அவர்கள், கரந்தை கணவர் நிதி ரூ. 1.

## நூல் நிலயத்தார் பெருங்கூட்டம்.

இச் சென்னையில் 1919-ஆ நவம்பர் மீ 14, 15உ களில் நடை பெற்ற இக்கூட்டத்தில் நம் சங்கமும் சேரவேண்டுமென்று அக்கூட்ட வமைச்சர் விரும்பியவாறே, திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் பி. ஏ., எல். டி., அனுப்பப்பெற்றார்கள். அவர்கள் கூட்டத்திற்குச் சென்று தாம் கண்டவற்றையும், அதன் பயனாக நாம் செய்யக்கூடியவற்றையும் விரித்து அறிக்கை செய்தார்கள். அதன்மேல் வேலையும், பொருளும் நேருங்கால் வேண்டுவன செய்யலாகும்.

## கையறு நிலை.

நம் சங்க உறுப்பினருள் ஆலங்குடி வேளாளர் திரு. தெய்வநாயகம் பிள்ளை அவர்களும், கீழ்வேளூர் உப்பளத்துணைக் கண்காணியர் (Salt Sub Inspector) திரு. கிருஷ்ணசாமி பிள்ளை அவர்களும் இவ்வாண்டில் இறைவன் திருவடி யெய்தியது எம்முள்ளத்தை மிகுதியும் துயர்விக்கின்றது. இவரது இல்லகத்தாருக்கு எமது ஆற்றொணாக்கவற்சியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

பேரறிவாளரும், நற்றமிழன்பரும், பெருங்கொடை வள்ளலும், நம் சங்கப்பற்றுடையவரும் ஆகிய ராவ்சாஹீப் திரு மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்களை இழந்தது நம் தமிழ் நாட்டிற்கே ஓர் பேரிழப்பென்னலாம். பல வழிகளிலும் அவர்களிடமிருந்து பல உதவிகளையும் எதிர் பார்த்திருந்த எம் ஏமாற்றத்தையும் துயரையும் என்னென்போம்.

அன்றியும் பத்தாம் ஆண்டின் தொடக்கத்தில், எம் முதற் புரவலரும் வரையாவீகைப் பேரிசையண்ணலும், காட்சிக்கெளிமையும், கடுஞ்சொலின்மையும் வளசபில் ஒழுக்கமும், மாசில்பேரறிவும் வாய்ந்து விளக்கியவரும் ஆகிய திரு. வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்கள் இறைவன் திருவடிநீழல் எய்தியதும் இச்சங்கங்கண்ட பேரிசைச்செம்மல் திரு. வே. இராதாகிருஷ்ண பிள்ளை அவர்களது அருமை மனைவியாரும் இச்சங்கத்தின் முதற் பெண்மணி யுறுப்பினரும் ஆகிய திரு. சண்பகவல்லியம்மாள் அவர்கள் இவ்வுலகு நீத்துத் தம் கணவர் இருப்பையடைந்ததும் நம் சங்கத்தின் இரண்டாம் ஆண்டுத் திருவிழாவில் தலைமைதாங்கி, எமக்கு அறிவூட்டிமகிழ்ந்து யாம் வேண்டும்போதெல்லாம் இன்மொழிகூறி நல்வழிகாட்டி வந்த திரு. தோ. இராமகிருஷ்ண பிள்ளை, பி. ஏ., எப். எம். யூ., எப். ஆர்., ஏ. எஸ்., அவர்கள் காலஞ்சென்றதும், எம்மனம் மாழ்க வருத்துகின்றன, அந்தோ! இறைவன் அருள் இருந்தவாறென்னே?

## பார்வையிட்டோர்.

இவ்வாண்டு நம் சங்கத்திற்கு எழுந்தருளி, நம் முன்னேற்றத்திற்கான வழிகளைக்கூறி நமக்குப் பேருதவி செய்த திரு. ஞானியார் சுவாமிகளுக்கும். கல்விக்கண்காணியர் (Inspector of Schools) திரு. இராகவாச்சாரியார் அவர்களுக்கும் யாம் என்றும் மறவா நன்றி பாராட்டுகின்றோம்.

## நன்றிகூறல்.

நமது சங்கம் தோன்றிய நாள் முதல் அதனைப்புரத்தலே தமது கடனென வோர்ந்து எம்மாட்டுப்பேரன்புகூர்ந்து வேண்டியாங்குதவி வருபவர்களும், தமிழ்க்கொடி படரும் தனிப்பெரு நிழலாயுள்ளவர்களும், சங்கமேம்பாட்டில் கண்ணுங்கருத்துமாயிருந்து நலம் பலவாற்றி வருபவர்களுமான ஆண்டிப்பட்டியின் அதிபர் திரு. சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் அவர்களுக்கு எமது என்றும் மறவாநன்றியைச் செலுத்துகின்றோம். சங்கத்தின் உயிர்நிலையாகிய எங்கள் தலைவர் அவர்கள் பொதுவாகச் சங்கத்திற்கும் சிறப்பாகக் கல்விக்கழகத்திற்கும் செய்துவரும் பேருதவி யெம்மால் அளவிடக்கூடியதன்று. அதற்குத்தக்க நன்றி செலுத்தலும், கைம்மாறு செய்தலும்எம்மாலாவதொன்றன்று. எம்தலைவர் வாழ்க! வாழ்க! என்று வாழ்த்துவதல்லது வேறென் செய்வேம். எம் தலைவர் அவர்களுக்கு ஒப்பற்ற துணையாகவிருந்து சங்கவேலைகளை அன்பொடு பார்த்து வரும் ஆ. ச. ஆறுமுகம்பிள்ளையவர்களுக்கும் எம்மொழி கொண்டு நன்றி செலுத்துவது? கைம்மாறு வேண்டாக்கடப்பாட்டு மாரிமாட்டென்னாற்றுங் கொல்லோவுலகு?

இச்சங்கத்தின் எழு, எட்டாம் ஆண்டுத் திருவிழாக்காலத்தில் தலைமைபூண்டு திருவிழாவைச் சிறப்பாக நடத்திய உயர்திரு ஞானியார் சுவாமிகள் அவர்களுக்கும் ஆண்டும் மற்றப்பொதுக்கூட்டங்களிலும் சொற்பொழிவாற்றிய பெருஞ்சொல்லாளர்களுக்கும்; திருவிழா நன்குநடைபெறுவதற்குப் பொருளுதவி புரிந்தும், மற்றும் பலவகையில் ஊக்கியும் எமக்கருள் சுரந்த திருவாளர்கள் இராவ்பகதூர் வீ. அப்பாசாமி வாண்டையார் அவர்கள், எஸ். எல். முத்துசாமி உடையார் அவர்கள், இராமச்சந்திரம் பிள்ளை அவர்கள், பாப்பாநாட்டு அதிபர் அவர்கள், காடேஜுவ் அவர்கள் முதலிய திருவாளர்களுக்கும் யாம் என்றும் கடமைப்பட்டவர்களாயிருக்கின்றோம்.

உறுப்பினர் அனைவரும் சங்கமேம்பாட்டிற் பெரிதும் ஈடுபட்டவர்களாயினும், திருவாளர் ஐ. குமரசாமி பிள்ளை அவர்கள், க. சண்முகம் பிள்ளை அவர்கள், த. பீ. சோமநாதராவ் அவர்கள், சி. தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை

அவர்கள், எம். எஸ். கலியாண சுந்தரமையர் அவர்கள், எ. டி. பன்னீர்ச் செல்வம் அவர்கள், சீ. கந்தசாமி பிள்ளை அவர்கள், டி. என். குருமூர்த்திப் பிள்ளை அவர்கள்முதலாயினோரது பெரும்பணிகள் சிறப்பாய்ப் பாராட்டற் பாலன.

எமக்கு இருப்பிடம் தந்துதவும் திரு. வா. கோவிந்தராசலு நாயுடு அவர்களுக்கும், திரு வா. சுப்பராயலு நாயுடு அவர்களுக்கும், சேருவைகாரன் தெருப்பஞ்சாயத்தார்களுக்கும், திருச்சிராப்பள்ளி நகர் மன்றத்தாருக்கும் எஸ். பி. ஜி. கல்லூரி, St. ஜோசெப் கல்லூரிகளின் தலைவர்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இதுகாறும் கூறிய தமிழன்பர்களுக்கும், பலதுறைகளிலும் எமக்குப் பேருதவி புரிந்துவரும் அறிஞர்களுக்கும், தஞ்சை நகராண்மையினருக்கும் நூல் முதலியன உதவியருளிய மதுரைத் தமிழ்ச்சங்கத்தினருக்கும் எமது நன்றியைப் பின்னரும் தெரிவித்துக்கொள்வதோடு, இவர்களெல்லாம் பல்வளம் பெருகப் பல்லாண்டு வாழ்ந்து நம் சங்கத்திற்குப் பேரணியாய் ஒளிரும்வண்ணம் இறைவன் திருவடியை வணங்குகின்றோம்.

மன்னுயிரனைத்தும் தன்னுயிரெனக்கொள் மாண்புறு ஜார்ஜ் மன்னர் மன்னன் வாழ்க பல்லூழி ! ஓங்குக செங்கோல் ! வாழ்க நல்வையம் ! வளர்க நன்னலமெலாம் !

## வேண்டுகோள்.

இறைவனால் படைக்கப்பெற்ற பல்லுயிர்த்தொகுதிகளினின்றும் மக்களை வேறுபடுத்தி உயர்நிலையிலுய்ப்பன பெரும்பாலும் மொழியும் அதன் உயிராகிய உள்ளப்பாங்குமேயாகும். ஒவ்வொரு நாட்டாரது மொழியும் அவற்றில் ஆக்கியுள்ள நூல்களும் அந்தந்த நாட்டினர்களது நிலையை நன்குணர்விக்கின்றனவாயிருக்கின்றன. சில மொழிகள் பழங்காலத்து உலகவழக்கிலும் நூல் வழக்கிலும் பயின்று பின்னர் மக்கள் உளவளர்ச்சிக்கேற்ப வளரவாற்றாவாய் உலகவழக்கிலொழிந்து நூல்வழக்கில் மட்டும் நிலவிவருகின்றன. அது தானும் இல்லாது இறந்தன பல. இன்று உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் உலாவிவரும் மொழிகள் பல பிற்காலத்தே தோன்றி நாளுக்குநாள் வடிவு திரிந்து இன்னும் ஒரு நிலையடையாது திரியுந்தன்மையவாய் இருந்துவருகின்றன. நமது தமிழ் மொழியோ இப்பொழுதைய மொழிகள் ஒன்றற்கும் தொன்மையிற் பின்வாங்காததாய் தனக்கென ஒரு தனி நிலையைப்பழங்காலத்திலேயே பெற்று நம் நாட்டில் வழங்கிவருகிறது. இருவழக்கிலும் பயின்று, உள்ளுந்தோறும் உருமலும் உற்று நோக்குவார்க்கு வருங்காலத்தும் தான் ஊறுபடா உண்மையைப் புலப்படுத்திக்கொண்டும் உலகில் நிலைத்திருப்பது நந்தாய் மொழியாம் சிந்தாமணியேயென்றே எனினும் மிகையாகாது.

ஒவ்வொரு நாட்டின் நூல்களும், ஒவ்வொரு காலத்தின் நூல்களும் அந்தந்த நாட்டில் அந்தந்தக்காலத்தில் வாழ்ந்து வந்த மக்களது உலகியல் நிலையையும் உளமுறு நிலையையும் விளக்குகின்றன என்னும் பிழைபடா உண்மையைக் கொண்டு நமது சங்கநூல்களை ஆராய்வோமாயின் நமது முன்னோர்கள் நன்னிலை எவற்றிலும் தன்னிகரிலையெனத் தனிப்புகழ் பெற்ற தமிழ்ப்பழங்குடிகள் என்பது நன்கு புலப்படாமற்போகாது. முல்லைக்குத்தேரும் மயிலுக்குப் போர்வையும் தொல்லையளித்த நல்லவர் வாழ்ந்ததும், இப்பிறவியிற் செய்யும் நன்மைகள் மறுமையில் துணையாகு மென் றெண்ணினும் தான் செய்த நற்செயல் பயன்கருதிச் செய்தலால் உண்மையான அறமாகாது என உளங்கொண்ட பேரறிஞர் பிறங்கியதும் பீடு பெறு தமிழ்நாடே. கல்வியிலும் வீரத்திலும் சிறந்த பெண்மணிகள் உண்மைதிகழ் ஒழுக்கத்தால் பெண்மை நிலை காட்டியதும் நமது தமிழ் நாடே. திரைகடலோடிப்பெருநிதிபெருக்கியும் உலைவிலா உழைப்பினால் உணவுப் பொருள்கள் பலவிளைவித்தும் கல்வியால் அறிவை மேம்படுத் தியும் நெறிக்கொரு எடுத்துக்காட்டாய் விளங்கியதும் நமது உயர்தமிழ் நாடேயாகும்.

இத்தகைய மேம்பாடுவாய்ந்த தமிழகத்தில் 'மொழியை' எவ்வாறு மதித்து வந்தார்களென்று ஆராய்வோமாயின், தங்கள் உயிரின் மேலாக மதித்து வந்தார்களென்பது தெற்றெனப் புலப்படுகின்றது. சங்ககாலங் களில் மொழிவல்லோரை வேந்தரும் போற்றிவந்தார்கள். தமிழ்மொழியில் ஒருபாட்டுப் பெறுவதைத் தங்கள் பிறவிப்பயனில் ஒன்றாகக்கருதிவந் தார்கள். பின்னரும் ஒவ்வொருசமயத்தாரும், தங்கள் தங்கள் கடவுளரும் தமிழ்க்குத் தொண்டு செய்தார் என்று கொண்டு மகிழ்வாராயினர். தாங்கள் தாங்கள் கொண்ட ஒப்புயர்வற்ற உயர்பெருங் கடவுளே தங்கள் மொழிக்குத் தொண்டு செய்தார் என்பதினும் மொழிப்பாலுள்ள தம் ஆர்வத்தை விளக்குவது எங்ஙனம்?

உலகத்திலேயே ஒப்புயர்வற்றதெனப் புகழத்தகும் நம்மொழி இப்பொழுது தன் மக்கள் பலராலும் புறக்கணிக்கப் பட்டுவருவதைக் கருதி தமிழ்மொழியைத் தன் பழநிலையிலிருத்த வேண்டியும் அதன் உயர்வை உலகறியச் செய்ய வேண்டியும் உலக அறிவைத்தமிழர் கள் உணரவேண்டியும் நிறுவிய நமது சங்கம் ஆற்றிவரும் தொண்டுகள் பலவாயினும் ஆற்றவேண்டியன மிகப்பலவிருக்கின்றன. முதற்கண் நமது பண்டைய நூல்களை யெல்லாம் நன்கு அச்சிடுவித்து யாவரும் வாங்கக்கூடிய எளிய விலைக்கு விற்றல்வேண்டியிருக்கிறது. இக்காலத்திற் கேற்ப புதுநூல்கள் பலதக்க அறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து வெளி யிடல் வேண்டியிருக்கின்றது. இவற்றை யெல்லாம் முற்றுவிப்பதற்கு

பொருளும் துணையும் இன்றியமையாதனவாயிருக்கின்றன. தமிழர்களில் நூற்றில் ஒருவரேனும் தம்மாலியன்ற சிறு உதவி செய்வதென உளங் கொண்டு எம்மோடு ஒத்துழைக்க முன் வருவார்களாயின் இன்றே நம் தமிழை எழில் பெறக்காணலாம். தமிழ் நிலை உயரின் நம் நிலை உயரும். நாம் உயர்வடைவோம்.

அன்பர்களே! எவ்வளவுதானும் நாங்கள் முயன்றாலும், 'தனிமரம் தோப்பாகுமா?' தாங்களும் தமிழர் தமிழ்க்குத் தொண்டு செய்ய வேண்டியவர்கள் என்பதை மறந்தீர்களா? நிலைகுலைந்த பொழுதும் தமிழ்க்குத் தலை கொடுத்த தண்ணளிசிறந்த இன்னியர் குடியில் பிறந்தவர்கள் தாங்கள் என்பதை மறந்தீர்களா? துயில்கின்றீர்களா? எழுமின்! எழுமின்! 'கரந்தைத் தமிச்சங்கம்' என்னும் கதிர் குணதிசைத் தோன்றி விட்டது. மண மிகு மலராம் நூல்பல விரித்து, மகிழ்விக்கின்றது. எழுமின்! முன்னாள் நிலையும் இன்றுள நிலையும் உற்று நோக்குமின்! இனிக் காலந்தாழ்த்தாது ஆவன செய்மின்!.

தமிழ்க்குத் தொண்டு செய்யுங்கள். உங்கள் முன்னோர் இவ்வாறிருந்தார் என்பது கூறும் பொழுது மட்டில் 'அவ்வாறு'! நம் முன்னோர் அப்படியா இருந்தார்கள்! நாம் செய்யவேண்டுவது கடமைதான் என்று எண்ணிக்கொண்டு இல்லம் சென்றவுடன் அதனை விடுத்து தங்கள் கடமையை மறந்து விடாதீர்கள். நீவிர் எண்ணியதெல்லாம் எண்ணியபடியே அடையலாம் தாங்கள் மட்டும் திண்ணமாக எண்ணி அவ்வாறே நடத்தல் வேண்டும். தாங்கள் பலரும் தங்கள் பல கடமைகளுள் தமிழ் மொழிபேணலைத் தலைக்கடனாகக் கொண்டு ஆவன செய்மின். இயன்ற பொழுது இயன்றன செய்மின். யாவரும் ஒரே உளமாய் ஒத்துழைக்க வல்லீரேல் நம் தமிழ்மொழி இன்றே உயர்நிலையடையும். நீவிர் ஒய்வாக நண்பரிடத்து உரையாடும் பொழுதேனும் தமிழ் நலம் உசாவுமின். ஒரு நாளைக்கு ஒரு நாழிகை தமிழ் நலத்திற்காக ஒதுக்கிவைப்பதினால் உங்கள் பிற தொழில்களுக்கு யாதொரு இடையூறும் வரப்போகிறதில்லை. அது தமிழ்க்குப் பேருதவியாயிருக்கும். தாங்கள் சிறிதென எண்ணி வீணே போக்கும் காலத்தையும் பொருளையும் தமிழ்க்காக்குவீரேல் அவை பல சேர்ந்து தமிழ்க்குப் பெருநலமாகும். இனிச் சொல்வதென்னை! அனைவரும் தமிழைப்போற்றுமின்! போற்றுமின்!! போற்றுமின்.!!!

தஞ்சை,<br>கரந்தை.

பா. கல்யாணசுந்தரம்,<br>அமைச்சர்.

சேர்க்கை. க'

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

---

*புரவலர்*

திருவாளர் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்கள், F. T. S., O. S. E.

திருவாளர் சா. ராம. மு. சித. பெத்தாச்சிச் செட்டியார் அவர்கள், M. R. A. S., ஆண்டிப்பட்டிச் சமீன்றார்.

---

*தலைவர்*

திருவாளர் ந. வே. உமாமகேசுவரம்பிள்ளை அவர்கள், B. A., B. L.

---

*அமைச்சர்*

திருவாளர் பா. கல்யாணசுந்தரம்பிள்ளை அவர்கள்.

---

*துணையமைச்சரும், நிதிக்கிழவரும்*

திருவாளர் கோ. சுப்பராயபிள்ளை அவர்கள்,

---

*திரிசிரபுரம் கிளை அமைச்சர்*

திருவாளர் E. R. நடேசபிள்ளை அவர்கள்.

---

*கணக்குப் பரிசோதகர்*

திருவாளர் அ. கணபதிப்பிள்ளை அவர்கள்.

---

*கல்விக் கழக எழுத்தாளர்*

திருவாளர் M. S. கலியாண சுந்தரமையர் அவர்கள்.

---

*நிறைவேற்றற் கழகத்தார்*

| | | | | |
|---|---|---|---|---|
| க | திரு. | ந. வே. உமாமகேசுவரம்பிள்ளை | அவர்கள், | B. A., B. L. |
| உ | ,, | பா. கல்யாணசுந்தரம்பிள்ளை | ,, | |
| ௩ | ,, | கோ. சுப்பராயபிள்ளை | ,, | |
| ௪ | ,, | ஐ. குமாரசாமிபிள்ளை | ,, | B. A. |
| ரு | ,, | சி. தக்ஷிணாமூர்த்திப்பிள்ளை | ,, | |
| சா | ,, | த. பீ. சோமநாதராவ் | ,, | |
| எ | ,, | க. சண்முகம்பிள்ளை | ,, | B. A. |

---

## உறுப்பினர்.

| | | | | |
|---|---|---|---|---|
| ௧‡ | திரு. | த. வே. உமாமகேசுவரம்பிள்ளை அவர்கள், B. A., B. L., வக்கீல், கரந்தை. | | |
| ௨‡ | ,, | R. வேங்கடாசலம்பிள்ளை அவர்கள், மிராசுதார், மோகனூர் | | |
| ௩‡* | ,, | அ. கணபதிப்பிள்ளை | ,, உத்தியோகம், | திரிசிரபுரம். |
| ௪‡ | ,, | சி. தக்ஷிணாமூர்த்திப்பிள்ளை | ,, ஷை | கரந்தை. |
| ௫‡* | ,, | R. கிருஷ்ணசாமிபிள்ளை | ,, ஷை | திரிசிரபுரம். |
| ௬* | ,, | T. N. குருமூர்த்திப்பிள்ளை | ,, வியாபாரம், | திரிசிரபுரம். |
| ௭‡ | ,, | பா. கல்யாணசுந்தரம்பிள்ளை | ,, ஷை | கரந்தை. |
| ௮‡ | ,, | V. கோவிந்தசாமிநாயுடு | ,, உத்தியோகம் | ஷை |
| ௯‡ | ,, | ஆ. ச. ஆறுமுகம்பிள்ளை | ,, வியாபாரம் | ஷை |
| ௰‡ | ,, | L. சொக்கலிங்கம்பிள்ளை | ,, மாணவர் | ஷை |
| ௧௧‡* | ,, | கோ. கோபாலகிருஷ்ணபிள்ளை | ,, உத்தியோகம் | திரிசிரபுரம். |
| ௧௨‡* | ,, | நா. துரைசாமிபிள்ளை | ,, ஷை | ஷை |
| ௧௩ | ,, | பக்கீர்முகம்மது சாஹீப் | ,, மிராசுதார், | வல்லம். |
| ௧௪‡* | ,, | E. R. நடேசபிள்ளை | ,, உத்தியோகம் | திரிசிரபுரம். |
| ௧௫‡* | ,, | P. கோவிந்தராஜர் | ,, ஷை | ஷை |
| ௧௬‡ | ,, | மு. பாலகிருஷ்ணபிள்ளை | ,, வியாபாரம், | கரந்தை. |
| ௧௭‡ | ,, | வீ. சு. சிதம்பரம்பிள்ளை | ,, ஷை | ஷை |
| ௧௮ | ,, | சி. சிவராமகிருஷ்ணபிள்ளை | ,, வைத்தியர் | தஞ்சை. |
| ௧௯‡ | ,, | ஐ. குமாரசாமிபிள்ளை | ,, B. A., வக்கீல் | கரந்தை. |
| ௨௰ | ,, | தி. முனிசாமிமுதலியார் | ,, உத்தியோகம், | சைதாப்பேட்டை. |
| ௨௧ | ,, | அ. சுப்பையாபிள்ளை | ,, வியாபாரம் | பம்பாய். |
| ௨௨ | ,, | ச. சண்முகம்பிள்ளை | ,, ஷை | தஞ்சை. |
| ௨௩ | ,, | அ. பாலசுப்பிரமணியபிள்ளை | ,, உத்தியோகம், | மதுரை. |
| ௨௪* | ,, | தி. பொ. இராமலிங்கம்பிள்ளை | ,, ஷை | திரிசிரபுரம். |
| ௨௫ | ,, | ம. தா. மதார்சாஹீப் | ,, வியாபாரம், | வல்லம். |
| ௨௬ | ,, | ஆ. மாணிக்கஞ்செட்டியார் | ,, ஷை | ஷை |
| ௨௭ | ,, | வை. அரங்கசாமிபிள்ளை | ,, உத்தியோகம், | தச்சன் குறிச்சி. |
| ௨௮‡ | ,, | அ. திருவேங்கடஞ்செட்டியார் | ,, வியாபாரம் | கரந்தை. |
| ௨௯* | ,, | N. சுப்பிரமணியபிள்ளை | ,, உத்தியோகம் | திரிசிரபுரம். |
| ௩௰* | ,, | T. A. சம்பந்தம்பிள்ளை | ,, ஷை | ஷை |
| ௩௧ | ,, | E. R. பொன்னுச்சாமிபிள்ளை | ,, மிராசுதார் | இடைக்கியம். |
| ௩௨* | ,, | மு. அருணாசலம்பிள்ளை | ,, உத்தியோகம் | திரிசிரபுரம். |
| ௩௩ | ,, | ச. அ. சாம்பசிவம்பிள்ளை | ,, ஷை | சென்னை |

| | | | |
|---|---|---|---|
| ௩௪ | திரு. | த. பீ. சோமநாதராவ் | அவர்கள், வியாபாரம் தஞ்சை. |
| ௩௫ | ,, | D. கந்தசாமிபிள்ளை | ,, உத்தியோகம் கரந்தை. |
| ௩௬* | ,, | அ. சதாசிவம்பிள்ளை | ,, உத்தியோகம் திரிசிரபுரம். |
| ௩௭ | ,, | ச. சந்திரசேகரம்பிள்ளை | ,, உத்தியோகம் கோவூர். |
| ௩௮ | ,, | T. M. இராம்தாஸ்ராவ் மாடிக் | ,, ஷை தஞ்சை. |
| ௩௯‡ | ,, | V. பிச்சைமுத்துமுதலியார் | ,, மிராசுதார் வரகுக்கோட்டை. |
| ௪௰‡ | ,, | அ. சகராயப்பிள்ளை | ,, B. A., B. L., வக்கீல், தஞ்சை. |
| ௪௧ | ,, | அ. அனந்தவிசய முதலியார் | ,, வியாபாரம் கரந்தை. |
| ௪௨ | ,, | ஆ. முத்துக்குமாரசாமிபிள்ளை | ,, B.A., வக்கீல், கருவூர். |
| ௪௩ | ,, | R. திருஞானம்பிள்ளை | ,, உத்தியோகம் தனுக்கோடி. |
| ௪௪ | ,, | கோ. சுப்பிரமணியபிள்ளை | ,, வியாபாரம், மன்னார்குடி. |
| ௪௫ | ,, | சொ. முத்தையாபிள்ளை | ,, ஒப்பந்தவேலை தனுக்கோடி. |
| ௪௬ | ,, | க. சாமிநாதபிள்ளை | ,, உபாத்தியாயர் ஆலத்தூர். |
| ௪௭ | ,, | வே. கந்தசாமிச்சேர்வைகாரர் | ,, மிராசுதார் ஆலங்குடி. |
| ௪௮ | ,, | மு. அண்ணாசாமி நாயுடு | ,, உத்தியோகம் தனுக்கோடி. |
| ௪௯ | ,, | கு. பேச்சுமுத்துப்பிள்ளை | ,, வியாபாரம் சுங்கந்திடல். |
| ௫௰ | ,, | மு. இரத்தினசபாபதிபிள்ளை | ,, உத்தியோகம் பர்ஹாம்பூர். |
| ௫௧ | ,, | அ. பாலசுப்பிரமணியபிள்ளை | ,, உபாத்தியாயர், கும்பகோணம் |
| ௫௨‡ | ,, | வீ. நாராயணசாமிபிள்ளை | ,, மிராசுதார், பட்டுக்கோட்டை. |
| ௫௩‡ | ,, | V. பெரியசாமிபிள்ளை | ,, உத்தியோகம், கரந்தை. |
| ௫௪ | ,, | ம. சாமிக்குச்சிராயர் | ,, மிராசுதார், குருங்களூர். |
| ௫௫ | ,, | பொ. சொக்கலிங்கம்பிள்ளை | ,, ஷை கூடலூர். |
| ௫௬ | ,, | சி. சாமிஐயாத்தேவர் | ,, ஷை அருந்தவபுரம். |
| ௫௭ | ,, | S. கோவிந்தசாமிச்செட்டியார் | ,, உத்தியோகம், பள்ளியக்கிரகாரம். |
| ௫௮ | ,, | ச. கோபாலபிள்ளை | ,, ஷை பாளையங்கோட்டை. |
| ௫௯‡ | ,, | ம. உலகநாதபிள்ளை | ,, வியாபாரம் தஞ்சை. |
| ௬௰‡ | ,, | M. S. கலியாணசுந்தரமையர் | ,, வக்கீல் கரந்தை. |
| ௬௧ | ,, | நா. கோதண்டபாணிப்பிள்ளை | ,, உத்தியோகம் தனுக்கோடி. |
| ௬௨ | ,, | அ. சாமிராவ் | ,, ஷை தஞ்சை. |
| ௬௩ | ,, | க. சாமிநாதபிள்ளை | ,, ஷை மதுரை. |
| ௬௪ | ,, | சுப்பராயலுநாயுடு | ,, வியாபாரம், வல்லம். |
| ௬௫ | ,, | T. B. தாஸ்ராவ் | ,, B. A., உத்தியோகம், வேதாரணியம். |

| | | | |
|---|---|---|---|
| சுசு‡ | திரு. S. இராசகோபாலபிள்ளை | அவர்கள் | உத்தியோகம் தஞ்சை |
| சுஎ‡ | ,, க. சண்முகம்பிள்ளை | ,, | B. A., வக்கீல், தஞ்சை |
| சுஅ | ,, அல்லிமுத்துப்பிள்ளை | ,, | உத்தியோகம், தஞ்சை. |
| சுகூ‡ | ,, மா. வே. கோபாலகிருஷ்ணையர் | | வியாபாரம், கரந்தை. |
| எ௦ | ,, T. R. விசுவநாதபிள்ளை | ,, | உத்தியோகம், இராமச்சந்திரபுரம். |
| எக‡ | ,, ம. நடராசபிள்ளை | ,, | B. A., B. L., வக்கீல், தஞ்சை. |
| எஉ | ,, ச. சி. பஞ்சநதம்பிள்ளை | ,, | வியாபாரம், கும்பகோணம். |
| எங | ,, வெ. இராமச்சந்திரராவ் | ,, | உத்தியோகம், தனுக்கோடி. |
| எச | ,, து. சுப்புசாமிநாட்டரையர் | ,, | உபாத்தியாயர் ஆச்சாம்பட்டி |
| எரு | ,, மு. அரிகரபுத்திரசெட்டியார் | ,, | வியாபாரம், வல்லம். |
| எசு | ,, T. R. இராசரத்தினம்பிள்ளை | ,, | B. A., L. T., உத்தியோகம், பொள்ளாச்சி. |
| எஎ | ,, அ. சதாசிவக் கண்டியர் | ,, | மிராசுதார், ஆவாரம்பட்டி. |
| எஅ | ,, S. சோமசுந்தரம் பிள்ளை | ,, | மாணவர், சிவகங்கை. |
| எகூ* | ,, மு. வேங்கடசாமி நாட்டார் | ,, | உபாத்தியாயர், திரிசிரபுரம். |
| அ௦ | ,, M. முத்தையா நாட்டார் | ,, | மிராசுதார், அரசன்குடி. |
| அக* | ,, R. நடேச முத்தரையர் | ,, | மாணவர், திரிசிரபுரம். |
| அஉ | ,, த. பொ. கை. அழகர்சாமி பிள்ளை | ,, | B. A, உத்தியோகம், பாவநாசம். |
| அங | ,, சு. சாமிநாத ராவ் | ,, | ஷெ தஞ்சை. |
| அச | ,, க. பொன்னுச்சாமிபிள்ளை | ,, | சங்கீதவித்துவான், தஞ்சை. |
| அரு | ,, T. V. சதாசிவப் பண்டாரத்தார் | ,, | உபாத்தியாயர், கும்பகோணம் |
| அசு ‡ | ,, சா. வேங்கடராம ஐயர் | ,, | ஷெ ஷெ |
| அஎ | ,, சா. சிவராமபிள்ளை | ,, | வியாபாரம், தஞ்சை. |
| அஅ‡ | ,, T. S. சுப்பையாபிள்ளை | ,, | உத்தியோகம், திருநெல்வேலி. |
| அகூ | ,, T. G. மாணிக்கம்பிள்ளை | ,, | ஷெ தஞ்சை. |
| கூ௦ | ,, சொ. மதுரையாபிள்ளை | ,, | மிராசுதார், சந்தலை. |
| கூக | ,, அ. பொன்னுச்சாமிபிள்ளை | ,, | ஷெ கரந்தை. |
| கூஉ | ,, S. மகாலிங்கம்பிள்ளை | ,, | உத்தியோகம், மகர்நோம்புச்சாவடி. |
| கூங | ,, சா. மாணிக்கம்பிள்ளை | ,, | ஷெ தஞ்சை. |
| கூச | ,, R. அருணசலம்பிள்ளை | ,, | உத்தியோகம், திரிசிரபுரம். |
| கூரு‡ | ,, T. G. வீரபத்திரபிள்ளை | ,, | ஷெ கருவூர். |

| | | | |
|---|---|---|---|
| ௯௬ | திரு. நா. சண்முக முதலியார் | அவர்கள் மிராசுதார் | பனையூர். |
| ௯௭ | ,, ஆ. சா. பழநியாண்டிப் பிள்ளை | ,, ஷை | ஆற்காடு. |
| ௯௮ | ,, அ. கிருஷ்ணசாமித்தேவர் | ,, ஷை | வாட்டார். |
| ௯௯ | ,, V. சுப்பராய முதலியார் | ,, உத்தியோகம், | திரிசிரபுரம். |
| ௱* | ,, தி. கூரத்தாழ்வார் முதலியார் | ,, ஷை | ஷை |
| ௱௧ | ,, அ. கந்தசாமிபிள்ளை | ,, உபாத்தியாயர், | கோயமுத்தூர். |
| ௱௨* | ,, S. செல்லப்ப முதலியார் | ,, உத்தியோகம், | திரிசிரபுரம். |
| ௱௩ | ,, C. சச்சிதானந்தம்பிள்ளை | ,, ஷை | தஞ்சை. |
| ௱௪ | ,, அ. சதாசிவம்பிள்ளை | ,, ஷை | கரந்தை. |
| ௱௫ | ,, G. சுப்பராயபிள்ளை | ,, ஷை | ஷை |
| ௱௬ | ,, இ. மகம்மதுகன்னி சாஹீப் | ,, வியாபாரம், | வல்லம். |
| ௱௭ | ,, வே. முத்துசாமிக் கண்டியர் | ,, மிராசுதார், | சுங்கந்திடல். |
| ௱௮ ‡ | ,, அ. முருகைய செட்டியார் | ,, மிராசுதார் | நீடாமங்கலம். |
| ௱௯ | ,, க. தம்புசாமிச் செட்டியார் | ,, ஷை | ஷை |
| ௱௰ | ,, S. சோமசுந்தர முதலியார் | ,, உத்தியோகம், | தஞ்சை. |
| ௱௰௧ | ,, த. சி. துரைசாமிபிள்ளை | ,, உத்தியோகம். | ஷை |
| ௱௰௨ | ,, சா. சச்சிதானந்தத் தஞ்சைராயர் | ,, மிராசுதார், | கூடலூர். |
| ௱௰௩ | ,, து. முத்துக்குமாரசாமித் தஞ்சைராயர் | ,, ஷை | ஷை |
| ௱௰௪ | ,, சு. காமாட்சியாபிள்ளை | ,, ஷை | குளமங்கலம். |
| ௱௰௫ | ,, சா. சுப்பராயபிள்ளை | ,, வியாபாரம், | ஆலத்தூர். |
| ௱௰௬ | ,, A. கோவிந்தசாமிபிள்ளை | ,, மிராசுதார் | ஷை |
| ௱௰௭ | ,, சி. வைத்தியலிங்கம்பிள்ளை | ,, ஷை | ஷை |
| ௱௰௮ | ,, V. சிவசாமிபிள்ளை | ,, ஷை | ஷை |
| ௱௰௯ | ,, சா. குப்புசாமி முதலியார் | ,, உத்தியோகம், | மணக்கால். |
| ௱௨௰ | ,, P. சுப்பையா முதலியார் | ,, மிராசுதார், | ஆலத்தூர். |
| ௱௨௰௧* | ,, தே. வையாபுரி உடையார் | ,, மிராசுதார், | மேலைக்கற்கண்டார் கோட்டை. |
| ௱௨௰௨‡ | ,, க. அண்ணாமலைப்பிள்ளை | ,, ஒப்பந்தவேலை, | கருவூர். |
| ௱௨௰௩ | ,, சீ. ரெ. கிருஷ்ணசாமி ஐயங்கார் | ,, B.A., B.L., வக்கீல், | மதுரை |

௱௨௪‡ திரு. சிவ. சோலைமுத்துப் பிள்ளை அவர்கள் தமிழ்ப்பண்டிதர், தஞ்சை.

௱௨௫ ,, ப. சிங்காரவேலுப்பிள்ளை ,, மிராசுதார், பள்ளியக்கிரகாரம்.

௱௨௬ ,, வா. முத்துசாமி நாயுடு ,, ஷை ஷை

௱௨௭ ,, சா. சிங்காரவேலுப்பிள்ளை ,, ஷை ஆற்காடு

௱௨௮‡ ,, நீ. கந்தசாமிபிள்ளை ,, மாணவர், பள்ளியக்கிரகாரம்.

௱௨௯ ,, க. அம்மையப்பிள்ளை ,, மிராசுதார், ஷை

௱௩௰‡ ,, A. T. பன்னீர்ச்செல்வ உடையார் ,, Bar-at-Law, தஞ்சை.

௱௩௧* ,, மு. குருசாமிபிள்ளை ,, உத்தியோகம், திரிசிரபுரம்.

௱௩௨ ,, N. சுந்தரராஜுலு நாயுடு ,, மிராசுதார், ஒட்டர்பாளையம்.

௱௩௩‡ ,, N. S. முத்துசாமி நாடார் ,, உத்தியோகம், கரந்தை.

௱௩௪‡ ,, ச. மாரிமுத்து நாடார் ,, வியாபாரம், விருதுப்பட்டி.

௱௩௫ ,, பொ. மாணிக்கம் செட்டியார் ,, ஷை தாதம்பேட்டைப் பழுவூர்.

௱௩௬ திரு. தாமஸ்கதிர்வேல்நாயனுர் ,, B. A. உத்தியோகம், வாலாசாநகரம்.

௱௩௭ ,, கி. அரங்கசாமிபிள்ளை ,, மிராசுதார், திருவாலம்பொழில்.

௱௩௮‡ ,, T. G. நாராயணசாமி பிள்ளை ,, மிராசுதார், கரந்தை.

௱௩௯ ,, L. உலகநாதபிள்ளை ,, தமிழ்ப்பண்டிதர், தஞ்சை.

௱௪௰‡ ,, B. S. ஆறுமுகம்பிள்ளை ,, மிராசுதார், சித்தர்காடு.

௱௪௧* ,, R. கோவிந்தசாமிபிள்ளை ,, உத்தியோகம், திரிசிரபுரம்.

௱௪௨ ,, R. கோபாலசாமிராவ் ,, ஷை தஞ்சை.

௱௪௩‡ ,, வே. ஆ. அற்புதம்பிள்ளை ,, ஷை மகர்நோம்புச்சாவடி.

௱௪௪‡ ஸ்ரீமாட்டி சண்பகவல்லி அம்மாள் ,, குடித்தனம், கரந்தை.

௱௪௫‡ திரு. பெ. ரி. கிருஷ்ணபிள்ளை ,, வியாபாரம், ஷை

௱௪௬‡ ,, தி. செ. இராமசாமி பிள்ளை ,, உத்தியோகம், தனுக்கோடி.

௱௪௭ ,, S. கிருஷ்ணமூர்த்திஐயர் ,, ஷை ஷை

௱௪௮‡ ,, A. S. அழகண்ணன்செட்டியார் அவர்கள் வியாபாரம், போதிநாயக்கனூர், ஆயுட்கால உறுப்பினர்.

௱௪௯‡ ,, ஸ்ரீ. வீராச்சாமிபிள்ளை ,, உத்தியோகம், தஞ்சை.

| | | | |
|---|---|---|---|
| ௩௫௰‡ | திரு. ஆ. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் B.A., | உத்தியோகம், | தஞ்சை |
| ௩௫௧* | ,, V. தியாகராசர் | ,, உத்தியோகம் | திரிசிரபுரம். |
| ௩௫௨* | ,, N. குப்புசாமிநாயுடு | ,, ,, | ,, |
| ௩௫௩‡* | ,, K. திருமலைசாமிநாயுடு | ,, ,, | ,, |
| ௩௫௪‡* | ,, K. சாமிநாயுடு | ,, வியாபாரம், | ,, |
| ௩௫௫* | ,, M. பெரியசாமிபிள்ளை | ,, உபாத்தியாயர் | ,, |
| ௩௫௬ | ,, M. மாரிமுத்துப்பிள்ளை | ,, உத்தியோகம், | தஞ்சை. |
| ௩௫௭ | ,, த. ச. புருஷோத்தம பிள்ளை | ,, ,, | ,, |
| ௩௫௮ | ,, N. கந்தசாமிபிள்ளை | ,, ,, | பாளையங்கோட்டை. |
| ௩௫௯ | ,, மு, கலியாணசுந்தரம் பிள்ளை | ,, ,, | தஞ்சை |
| ௩௬௰ | ,, K. முத்துக்குமாரசாமி பிள்ளை | ,, ,, | திரிசிரபுரம். |
| ௩௬௧ | ,, S. V. இராசகோபால பாகவதர் | ,, வியாபாரம் | மகர்நோம்புச்சாவடி. |
| ௩௬௨‡ | திரு. து. வேங்கடரத்தினம் நாயுடு அவர்கள், | உத்தியோகம், | திருநெல்வேலி. |
| ௩௬௩‡ | ,, இ. குப்புசாமிநாயுடு | ,, ௸ | தஞ்சை. |
| ௩௬௪ | ,, ச. சோமசுந்தரதேசிகர் | ,, ௸ | திருவாரூர். |
| ௩௬௫ | ,, மு. கலியப்பெருமாள் வன்னியர் | ,, மிராசுதார், | கூடலூர். |
| ௩௬௬ | ,, நா. பொன்னுசாமித் தஞ்சைராயர் | ,, ௸ | ௸ |
| ௩௬௭ | ,, கோ. பஞ்சநதப்பத்தர் | ,, இரத்தினவேலை, | தஞ்சை. |
| ௩௬௮ | ,, தி. ந. சுப்பிரமணிய பிள்ளை | ,, உத்தியோகம், | ௸ |
| ௩௬௯ | ,, தா. அமீர்பாட்சாசாஹிப் | ,, வைத்தியம், | ,, |
| ௩௭௰ | ,, நா. சிதம்பரஞ் செட்டியார் | ,, லேவாதேவி, | ,, |
| ௩௭௧ | ,, செ. பொன்னுச்சாமி பிள்ளை | ,, ,, | ,, |
| ௩௭௨ | ,, தி. சோ. தியாகராச ஞானியார் | ,, பத்திராதிபர், | திருவாரூர். |
| ௩௭௩ | ,, த. சா. மகாலிங்கப்பத்தர் | ,, தங்கவேலை, | தஞ்சை. |
| ௩௭௪ | ,, க. அரங்கசாமித்தேவர் | ,, மிராசுதார், | காடந்தக்குடி. |
| ௩௭௫ | ,, கை. கோபாலசாமித் தேவர் | ,, ,, | ,, |

௱எசு திரு. தி. து. அப்பாசாமிப்
பிள்ளை அவர்கள் உத்தியோகம், தஞ்சை.

௱எஎ‡* ,, உ. க. இலக்குமண
பிள்ளை ,, ,, திரிசிரபுரம்.

௱எஅ ,, அ. சிதம்பரமுதலியார் ,, ,, ஸ்ரீபெரும்பூதூர்.

௱எகூ ,, ரெ. வெ. இரத்தின
சபாபதி பிள்ளை ,, வியாபாரம், மேலூர்.

௱அ௰ ,, த. ம. இரத்தினசபாபதி
பிள்ளை ,, உத்தியோகம், திருநெல்வேலி.

௱அக ,, V. சிதம்பரம்பிள்ளை ,, ,, பூந்தோட்டம்.

௱அஉ‡ ,, T. S. சபாபதிபிள்ளை ,, B. A., ,, ஒரத்தநாடு.

௱அங ,, V. கோவிந்தராசலுநாயுடு ,, உபாத்தியாயர், தஞ்சை.

௱அச‡ ,, ந. கி. குருசாமிநாயுடு ,, மிராசுதார், திருவாரூர்.

௱அரு‡ ,, T. M. சாரங்கபாணி
பிள்ளை ,, உத்தியோகம், ஆலக்குடி.

௱அசு‡ ,, K. குப்புசாமிபிள்ளை ,, ,, பல்லாரி.

௱அஎ ,, M. G. நல்லதம்பி
முதலியார் ,, ,, தஞ்சை.

௱அஅ‡ ,, M. R. இராமகிருஷ்ணன் ,, ,, உலப்பேன்(இலங்கை)

௱அகூ ,, வ. இராமச்சந்திரபிள்ளை ,, மிராசுதார், திருமணங்குடி.

௱கூ௰ ,, ம. முத்துவேல் நாயனார் ,, சோதிடர், மிராசுதார்,
வல்லம்.

௱கூக ,, மு. புஷ்பநாதபிள்ளை ,, கணக்கர், ஐயன்பேட்டை.

௱கூஉ ,, கோ. வீரப்பிள்ளை ,, வியாபாரம் வல்லம்.

௱கூங ,, சு. இராமலிங்கஞ்
செட்டியார் ,, வியாபாரம், கரந்தை.

௱கூச ,, L. சின்னையா உடையார் ,, மிராசுதார், பெரும்பண்ணையூர்.

௱கூரு ,, T. M. கண்ணுச்சாமிபிள்ளை ,, உத்யோகம், கரந்தை.

௱கூசு ,, T. M. பக்கிரிசாமிபிள்ளை ,, ,, ,,

௱கூஎ ,, K. சுப்பிரமணியபிள்ளை ,, M. A., M. L., வக்கீல்,
திருமயிலை.

௱கூஅ மறைத்திருவன் சுவாமிவிருதை
சிவஞான யோகிகள் ,, கோவிற்பட்டி.

௱கூகூ ‡ திரு. T. S. மாணிக்கவாசகம்
பிள்ளை ,, மாணவர், கரந்தை.

உ௱‡ திரு. T. G. கலியப்பெருமாள்பிள்ளை அவர்கள், உத்தியோகம்,
திருமக்கோட்டை.

௨௱௧ திரு. ச. திருநாவுக்கரசுப்பிள்ளை அவர்கள், உத்தியோகம், தஞ்சை.
௨௱௨ ,, க. சொ. நடேசத்தேவர் ,, மிராசுதார், தம்பிக்கோட்டை.
௨௱௩‡*,, T. G. கோபாலபிள்ளை ,, வியாபாரம், திரிசிரபுரம்.
௨௱௪ *,, ச. சாம்பசிவம்பிள்ளை ,, உத்தியோகம், ,,
௨௱௫‡*,, உ. க. பஞ்சரத்தினம்பிள்ளை ,, வியாபாரம், ,,
௨௱௬ ,, ச. சச்சிதானந்தம்பிள்ளை ,, B. A., L. T., உத்தியோகம்,
சைதாப்பேட்டை.
௨௱௭ ,, A. R. சிவானந்த முதலியார் ,, மிராசுதார், கரூர்.
௨௱௮ ,, R. P. சேதுப்பிள்ளை ,, B, A., B, L., வக்கீல்,
திருநெல்வேலி.
௨௱௯ ,, மு. தண்டாயுதபாணிக்காடவ
ராயர் ,, மிராசுதார், விண்ணமங்கலம்.
௨௱௰ ‡ ,, இரா. காளத்தியையர் ,, உத்தியோகம் தஞ்சை.
௨௱௧௧ *,, மு. இராமசாமிச்செட்டியார் ,, வியாபாரம், திரிசிரபுரம்.
௨௱௧௨ *,, T. S. சாமிநாதபிள்ளை ,, உத்தியோகம், ,,
௨௱௧௩‡*,, ந. மு. பூவணலிங்கம்பிள்ளை ,, ,, ,,
௨௱௧௪‡ ,, பி. சுந்தரமையர் ,, ,, கரந்தை.
௨௱௧௫ ,, பா. வே. மாணிக்கநாயக்கர் ,, B. E., M. C. I. (LONDON),
உத்தியோகம், வேலூர், ஆயுட்கால உறுப்பினர்.
௨௱௧௬ ,, சா. சண்முகசுந்தரம்பிள்ளை ,, மிராசுதார், கரந்தை.

‡ புத்தகசாலைக்கும் உறுப்பினர். * திருச்சிக்கிளை உறுப்பினர்.

---

## சேர்க்கை உ.

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

### காலயுத்தி-சித்தார்த்தியாண்டில் புத்தகங்கள் உதவியவர்களின் விவரம்.

| | | |
|---|---|---|
| ௧ | கரந்தைத் தமிழ்ச் சங்கம் (விலைக்கு வாங்கினவும், பிறவும்) | 20 |
| ௨ | திரு. ச. பொன்னுசாமிபிள்ளை அவர்கள், திரிசிரபுரம் | 30 |
| ௩ | ,, த. வே. உமாமகேசுவரம்பிள்ளை ,, B. A., B. L., கரந்தை | 26 |
| ௪ | ,, A. சாம்பசிவம்பிள்ளை ,, | 7 |
| ௫ | ,, பெ. கோவிந்தராசர் ,, திரிசிரபுரம் | 4 |
| ௬ | ,, அ. கணபதிபிள்ளை ,, ,, | 3 |
| ௭ | ,, அ. சிதம்பரம்பிள்ளை ,, ,, | 2 |
| ௮ | ,, அ. சதாசிவம்பிள்ளை ,, ,, | 2 |

| | | | |
|---|---|---|---|
| கூ | திரு. பாலையானந்தசுவாமிகள் அவர்கள் | திருப்பனந்தாள் | 2 |
| ௰ | ,, பண்டிதர். அ. கந்தசாமிபிள்ளை | ,, கோயமுத்தூர் | 1 |
| ௰க | ,, திருவாரூர்த் தமிழ்ச்சங்கம் | ,, | 1 |
| ௰உ | ,, பழனிவேற்பிள்ளை | ,, தஞ்சைக் கீழைவாயில் | 1 |
| ௰ரு | ,, சிவ. சோலைமுத்துப்பிள்ளை | ,, ,, கோட்டை. | 1 |
| ௰சு | ,, ம. நடராசப்பிள்ளை | ,, B. A., B. L., தஞ்சை | 1 |
| ௰௬ | ,, வீ. சுப்பராயபிள்ளை | ,, கரந்தை | 1 |
| ௰சா | ,, நா. கணபதிபிள்ளை | ,, பள்ளியக்கிரகாரம் | 1 |
| ௰எ | ,, பா. கல்யாணசுந்தரம்பிள்ளை | ,, கரந்தை | 1 |
| ௰அ | ,, T. S. அருணாசலம்பிள்ளை | ,, ,, | 1 |
| ௰கூ | ,, S. T. நாகப்பசெட்டியார் | ,, காரைக்குடி | 1 |
| உ௰ | ,, T. B. தாஸ்ராவ் | ,, B.A., தஞ்சைக்கோட்டை | 1 |
| | | | 107 |

---

## சேர்க்கை ங.

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

### திரிசிரபுரம் கிளை.

### ஆறாம் ஆண்டின் அறிக்கை.

எந்நலங்களும் ஒருங்கெய்தப்பெற்ற இந்நகரிலிக்கிளை தனக்குவமையில்லாதான் பேரருளால் தனது ஆறாம்ஆண்டு நிறையப்பெற்றது.

### க. உறுப்பினர்.

சென்ற வாண்டினிறுதியில் இக்கிளை உறுப்பினராய் நின்றார் இருபத்தொன்பதின்மர். இவருள் தாம் ஒப்பிய சிறு ஒப்பத்தொகையைச் செலுத்த இயலாமல் சங்கத்தினின்றும் விலகிக்கொண்டாரொருவர், இந்நகரினின்றும் வேற்றூருக்குப்போய்த் தாயவையுடன் சேர்ந்தாரொருவர் எஞ்சிநின்ற இருபத்தெழுவரோடு இச்சங்க நலங்கருதிப்புதியராய்க் கூடினார் ஆறுபேராக, இவ்வாண்டினிறுதியில் உறுப்பினராய்த் தொக்கார் முப்பத்துமூவராவர்.

### உ. கூட்டங்கள்.

சித்தார்த்தியாண்டு ஆடித்திங்கள் சா-ம்நாள் (21—7—19) இந்நகர்ப்பொதுமன்றத்தில் திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் திருஞானியார் மடத்தின் தலைவர் உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் செந்தமிழ்ச்சிறப்பைப் பலநூல்கள் வாயிலாக யாவருளத்திலும் பதியுமாறு மிகத் தெளிவாய் எடுத்தோதி எங்களை மகிழ்வித்தார்கள்.

சித்தார்த்தியாண்டு கார்த்திகைத் திங்கள் ௰-ஆம் நாள் (25-11-19) இந்நகர் St. Joseph's College-ல் திருவாளர் பா. வே. மாணிக்கம்நாயக்கரவர்கள் B. E., M. C. I. (London) 'Phonetics for Students and Teachers-Ancient Tholkappiar *Vs.* Modern Jones' என்ற பொருளை எடுத்துக்கொண்டு யாவரும் தொல்காப்பியரின் நுண்ணறிவு இருந்தவாறென்னையென்று வியக்குமாறு அவர் கூறிப்போந்த ஒலியிலக்கணத்தின் ஓர் சிறுபகுதியை எல்லோரும் களிக்க விளங்கவைத்து Jones துரைமகனார் வெளியிட்டிருக்கும் ஒலியிலக்கணத்தில் சில மாறுபட்ட கொள்கைகளையும், தவறுகளையும் எடுத்துக் காட்டினார்கள். ஆயகாலை அவை வீற்றிருந்த Father H. J. Quinn S. J, அவர்கள் முடிவில் தொல்காப்பியரின் நுண்ணறிவை வியந்து நாயக்கரவர்கள் எடுத்துப் பேசாத சில பகுதிகளை எடுத்துக்கொண்டு தொல்காப்பியர் இவைகளைப்பற்றி ஒன்றும் விளக்கவில்லையே என்று குறைகூறினார்கள். இறுதியில் திரு நாயக்கரவர்கள் அவைகளைப்பற்றி தொல்காப்பியர் நன்கு விளக்கியிருக்கின்றார் என்றும் அவைகளை இங்கெடுத்துச் சொல்லக் காலமில்லை யென்றும், காலம் வாய்க்குங்கால் மற்றோர் முறையில் அவரது ஐயப்பாடுகளைத் தீர்த்துவைப்பதாகவும் பதிலளித்தார்கள். இக்கூட்டத்தை இனிது நடத்திவைத்த Father H. J. Quinn S. J. அவர்கள்பால் யாம் என்றும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கின்றோம்.

இப்பெரியார் தம் அரும்பெருங் காலங்களைத் தமிழுக்குழைத்தலே தகுதியென்று உன்னி, பற்பல இடங்களுக்கும் வலியச்சென்று தமிழுக்கிருக்கும் சிறப்பைத் தமிழ்மக்கள் நன்குணர எடுத்தோதிவருவது தமிழுலகம் அறியாததன்று. யாம் அவர்கண்மாட்டு நன்றி பாராட்டக் கடமைப் படுவதோடு, அவர்கள் பிணியற்றவல்லுடம்போடு நீடூழிவாழ்ந்து, அவர்கள் கைக்கொண்ட தமிழ்த்தொண்டு இனிது நிறைவேற எல்லாம் வல்ல செம்பொருளை மனமொழி மெய்களால் வழிபடுகின்றோம்.

ந. நூலாராய்ச்சி.

சென்ற வாண்டினறிக்கையிற் குறிப்பிட்டபடியே புறநானூற்றில் ஆராய்ந்த செய்யுட்கள் இருநூறு. இம்முயற்சிக்குத் துணையாவார் மிகச் சிலரே. இனியேனும் உறுப்பினர் எல்லோரும் இப்பெறுதற்கரிய காலத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுகிறோம்.

ச. வருவாய்

இக்கிளை மூலமாய் இவ்வாண்டின் வருவாய் கீழ்க்கண்டவாறு ;—

| | | | |
|---|---|---|---|
| மாதச்சந்தா | ... | ரூ. | 120—7—0 |
| புத்தகசாலைச்சந்தா | ... | | 12—8—0 |
| நன்கொடை | ... | | 113—0—0 |
| | | | 245—15—0 |
| பொதுக்கூட்டங்களின் செலவு | ... | | 27—10—9 |
| பாக்கி | ... | | 218—4—3 |

இச்சங்கம் செய்ய முயலும் நலங்களை நன்குணர்ந்த உறுப்பினர் பலரும், சங்கம் நடாத்திவரும் பணிகள் முட்டுப்பாடின்றி நிறைவேற எம்மோடு துணை நின்று ஒத்துழைப்பதோடு தம்மாலியன்றவரை தக்க உறுப்பினர்களைச் சேர்த்துக் கொடுக்கவேண்டுகிறோம்.

ரு. நன்றிகூறல்.

எம்மாட்டு ஒரு சிறிதும் கைம்மாறு கருதாதுயாம் கல்வி கேள்விகளில் மேம்படவேண்டு மென்பதையே எண்ணிப் பேரன்புடன் வழக்கம்போல் எங்கட்குப் பாடங்கற்பித்துவரும் திருவாளர் பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டாரவர்கட்கும், எங்கள் பொதுக் கூட்டங்களை நடத்த இடந் தந்துதவிய இந்நகர்ப் பொதுமன்றச்சபையார்கட்கும், சூசையப்பர் கல்லூரித்தலைவரவர்கட்கும், எம்பொதுக் கூட்டங்களை நலம் பெற நடத்தி வைத்ததிருவாளர் S. அற்புதசாமி உடையார் B. A., L. T., அவர்கட்கும் எங்கட்குப் பொருளுதவிய இந்நகர் வணிகர்கட்கும் செல்வர்கட்கும், வழக்கம்போல் எங்கட்குவேண்டுவன செய்துவரும் எம் தாய்ச்சங்கத்தாருக்கும், உலகமாறிடினும் உறுதிமாறாது தமிழ்த் தொண்டு புரிந்துவரும் எங்களருமைத் தலைவரவர்கட்கும் எங்களன்பார்ந்த கடப்பாட்டை மனமாரச் செலுத்துகின்றோம்.

நலம்.

திரிசிரபுரம்
சித்தார்த்தி, தை

E. R. நடேசன்.
கிளையமைச்சர்.

சேர்க்கை ௪.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

(காப்பிடப்பெற்றது.)

## காலயுக்தி—சித்தார்த்தியாண்டில் வரவு, செலவு நிரல்.

| வரவு. | தெகை ரூ. | அ. | ப. | செலவு. | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| சென்றவாண்டின் கடைசியில் மிச்சம் | 1868 | 1 | 7 | பொதுக்கூட்டம் | 41 | 4 | 10 |
| | | | | அச்சுக்கூலி | 3 | 11 | 6 |
| இவ்வாண்டில் :— | | | | எழுதுகருவிகள் | 18 | 15 | 0 |
| திங்கட்கட்டணம் | 496 | 11 | 0 | வழிச்செலவு | 1 | 8 | 6 |
| | | | | அஞ்சல் | 6 | 0 | 3 |
| நூல்நிலையக்கட்டணம் | 46 | 0 | 0 | நூல்கள் | 41 | 6 | 0 |
| | | | | பத்திரிகை | 52 | 13 | 0 |
| நன்கொடை | 1882 | 2 | 3 | எழு, எட்டாவது ஆண்டுத்திருவிழா | 1159 | 15 | 3 |
| வட்டி | 63 | 5 | 11 | சாமான்கள் | 99 | 11 | 3 |
| | | | | வினைஞர்கூலி | 345 | 4 | 10 |
| நூல்கள்விற்பனை | 6 | 5 | 9 | பொதியோலை (Stamp Paper) | 1 | 0 | 0 |
| தனி | 13 | 4 | 0 | நூல்கள் கட்டுக்கூலி | 28 | 6 | 0 |
| | | | | கட்டிடங்கள் சாமான்கள் பழுதுபார்த்தது | 76 | 5 | 0 |
| | | | | விளக்கு | 7 | 2 | 1 |
| | | | | இறை | 3 | 4 | 10 |
| | | | | சில்லரை | 7 | 0 | 8 |
| | | | | | 1893 | 13 | 0 |
| | | | | மிச்சம் இருப்பு ... | 2482 | 1 | 6 |
| மொத்தம் ... | 4375 | 14 | 6 | | 4375 | 14 | 6 |

கருந்திட்டைக்குடி இரௌத்திரி ௵ வைகாசி ௴

பா. கல்யாணசுந்தரம், அமைச்சர்.

கோ. சுப்பராயன், நிதிக்கிழவர்.

ஆராய்ச்சியிற் சரியெனக் காணலாயிற்று.

அ. கணபதி,

கணக்கு ஆராய்ச்சியாளர்.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்

தமிழ் மணம் பரப்பும்

---

## அடியிற்கண்ட அருமையான
## நூல்கள் சங்கத்தில்
## விலைக்குப் பெறலாகும்.

| | ரூ. அ. பை. |
|---|---|
| உபந்நியாசங்கள் (பல புலவர் செய்தவை) | 0—௪—0 |
| கல்விப் பயிற்சிக்குரியது தாய் மொழி. (வே. இராதாகிருட்டின பிள்ளை, பீ. ஏ.) | 0—0—௬ |
| பிரசங்கங்கள் (வீ. வேங்கடராம பிள்ளை) | 0—௨—0 |
| ஆசாறுற்றுப்படை (ஆர். வேங்கடாசலம் பிள்ளை) | 0—௧—0 |
| வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி (பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்) | 0—௫—0 |
| நக்கீரர் (பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்) | 0—௮—0 |
| கபிலர் ( ஷ ) அச்சில் | ... |
| காரிகாற் சோழன் (பண்டிதர் எல். உலகநாத பிள்ளை) | 0—௧௨—0 |
| கன்றுங் கனியுதவும் ( ஷ ) | 0—௬—0 |

---

சேந்தமிழ் மணம் பரப்பும்

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

கரந்தைத் தமிழ்ச் சங்கம்

தண்டமிழ்த் தொண்டு புரியும்.

# தமிழ்.

சங்கநிதி பதுமநிதி
யிரண்டுந் தந்து
தரணியொடு வானுளத்
தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம்
மதிப்பேம் அல்லேம்
மாதமிழுக் கேகாந்தர்
அல்ல ராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு
தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும்
புலைய ரேனும்
தங்குபுகழ்ச் செந்தமிழ்க்கோர்
அன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங்
கடவு ளாரே.

தண்டமிழ்த் தொண்டே புரியும்
கரந்தைத் தமிழ்ச் சங்கம்.